ஓம் ஸ்ரீ குருப்யோ நம:

# அறிவே இறைவன்

## (சுவாமி பிரபஞ்சநாதன்)

**அனைத்து ஆத்ம சாதகர்களுக்கும் நமஸ்காரம், இந்த பராவித்யா முகநூலில் கடந்த இரண்டு மாதங்களாக "ஸ்ரீ திரிபுர ரகசியம்" என்ற நூலை அனைவருக்கும் படித்து எளிமையாக புரிந்து கொள்ளும் வகையில் இங்கு கொடுக்கப்பட்டு வருகின்றது.**

**இதில் கடைசியாக கொடுக்கப்பட்ட அத்தியாயம் - 17 (பகுதி - 36) - ல் சாதகர்களின் அதிகாரித்துவம் என்ற தலைப்பில் அவரவர்களது தகுதிகளை ஐந்தாக பிரித்து சுட்டிக்காட்டப்பட்டது.**

**இதில் அவரவர்களுக்கு "நான்" இதில் எந்த நிலையில் தகுதி உடையவனாக இருக்கின்றேன் என்று தன்னையே சுயப்பரிசோதனை செய்து கொள்ள ஏதுவாக இருக்கும்.**

**இதில் மிக உயந்த அதிகாரியாக "உத்தமோ உத்தமன்" பற்றி பேசப்பட்டது.**

**அவன் தன்னை அவ்வாறு கூறிக்கொள்ள அவனிடத்தில் உள்ள வைராக்கியமும், அவன் அடைந்த அனுபவத்தின் திட நம்பிக்கையும் மட்டுமே அவ்வாறு ஒரு புரிதலை உண்டாக்க முடியும்.**

**எவனொருவன் மோக்ஷத்தை விரும்புகிறானோ,அவன் இந்திரியங்களின் இச்சைகளுக்கு தீனி போடுகின்ற எல்லா சாதனங்களையும் வெறுத்து ஒதுக்க வேண்டும். அவன் பொறுமை, உண்மை, கருணை, போதும் என்ற மனம், பணிவு போன்ற குணங்களை கொண்டவனாக இருக்க வேண்டும். என்று அஷ்டாவக்கிர கீதை குறிப்பிடுகின்றது.**

**அடுத்து,**

**மேலும், எவ்வளவுதான் வேதாந்த சாஸ்திர ஞானம் நிறைந்து இருந்தாலும், இவைகளை படித்தும், கேட்டும் அறிந்தவர்களாக இருந்தாலும், அதைக் கேள்விப்பட்ட ஞானமாக மட்டுமே நிறுத்திக் கொள்ளாமல், தன்னை அறிகின்ற விசார மார்க்கத்தில் வந்து விவேகம், வைராக்யம், ஷட்க சம்பத்தி, முமுக்ஷுத்வம் என்ற நான்கு படி நிலைகளை கடந்து முன்னேற வேண்டும்.**

**அத்வைத வேதாந்த தத்துவத்தை தமிழ் மொழியில் ஸ்ரீ ல ஸ்ரீ தாண்டவராய சுவாமிகள் இயற்றிய**

“கைவல்ய நவநீதம்” என்ற தனது நூலில் கீழ்க்கண்டவாறு நான்கு தகுதிகள் ஒருவனுக்கு உண்டாக வேண்டும் என்று கூறியுள்ளார்.

நித்திய அனித்தியங்கள் நிண்ணயம்தெரி விவேகம்
மத்திய இகபரங்கள் வருபோகங்களில் நிராசை
சத்தியம் உரைக்க வேண்டும் சமாதி என்று ஆறுகூட்டம்
முத்தியை விரும்பு இச்சை மொழிவர் சாதனம் இந்நான்கே

(தத்துவ விளக்கப்படலம் - *8*)

நாம் காணுகின்ற பொருள்களில் மாறுதலுக்கு உட்பட்டவைகள் எவை? மாறாத நித்தியமானவை எவை என சிந்தித்து அறிவது அறிவு.

இதுவே, முதல் பக்குவம்.

இதற்கு “நித்திய அநித்திய வஸ்து விவேகம்” என்று பெயர்.

இந்தப் பிறவியிலும், இனி வரப்போகும் பிறவிகளிலும் உண்டாகும் போக போக்கியங்களில் பற்றற்ற தன்மை. இதை இந்தப்பிறவியில் எதற்கும் ஆசைப்படாமலும், இனி இறந்த பிறகு சொர்கம், சத்தியலோகம், போன்ற உயர் லோகங்களுக்கு செல்ல வேண்டும் என்ற ஆசைப்படாமலும் வாழ்தல் என்று பொருள். இதுவே வைராக்கியம். இது இரண்டாவது பக்குவமாகும்.

இதற்கு "இகமுத்திரார்த்த பல போக விராகம்" எனப் பெயர்.

பிறகு சமம், தமம், விடல், சகித்தல், சமாதானம், சிரத்தை என்கின்ற சமாதி சட்க சம்பத்தியாம் என்ற ஆறுவகை குணங்களும் சேர்ந்து மூன்றாவது பக்குவமாகும்.

வீடுபேறு அடைய வேண்டும் என்ற ஆசை. மோக்ஷத்தை அடையும் முமுக்ஷுத்துவம் இது நான்காவது பக்குவமாகும்.

இந்த நான்கு பக்குவங்களும் உடைய ஒருவனால்தான் அத்வைத ஞானத்தை அறிந்து ஆத்மாவை அனுபவமாக அறிய முடியும்.

இவ்வாறு பக்குவம் கொண்ட ஒருவன் கீழே கொடுத்துள்ள நுட்பமான அத்வைத அறிவை புரிந்து கொள்ளத் தகுதி உடையவனான உத்தமோ உத்தமன் ஆவான்.
மற்றவர்களுக்கு எல்லாம் இது புரிந்து கொள்ளவே முடியாது.

(குறிப்பு:- இங்கு "அறிவு" என்று கூறப்படுவது (சாஸ்திரங்கள், அறிவியல், விஞ்ஞானம், கணிதம், வரலாறு போன்ற) பாடங்களை கற்று அறிகின்ற சிறிய "அபராவித்யா" அறிவைப் பற்றிக் கூறவில்லை.

அவை எல்லாவற்றையும் அறிந்து கொள்கின்ற "ஒரு அறிவு" இருக்கின்றது அல்லவா? அந்த (பிரம்மத்தைப் பற்றிய) அறிவைக் காட்டிக்கொடுக்கின்ற "பராவித்யா" அறிவைப் பற்றிக் கூறப்படுகின்றது.

"இருப்பதெல்லாம் இறைவனே" என்று கூறும் போது, ஏன் குறிப்பாக "அறிவை மட்டும் இறைவன்" என அத்வைதம் கூறுகின்றது?

கீழே கொடுக்கப்பட்டுள்ளதை மிகவும் நுண்ணிய அறிவால் ஒரு முறைக்கு இரு முறை படித்து புரிந்து கொள்ள முயற்சிக்கவும்.

## "அறிவே இறைவன்"

என்னை "நான்" என்று அறியும் அறிவும், எனக்கு வேறாக நீ, அவன், அவள், அது என அறியும் அறிவும் "ஒரே அறிவு" என்பதினால், அறிபவனாகவும், அறியப்படும் பொருளாகவும் இருப்பது அந்த "அறிவு" மட்டுமே.

அவ்வாறு அறியும் அறிவே "அது", "நான்", "நீ",
"இறைவன்" என எல்லாமாகவும் இருக்கின்றது.

இந்த "அறிவு" இன்றி எதுவும் விளங்காது.

அதுவே "சித்" என்ற "அறிவாக" இருக்கின்றது.

"அறிவு" இருப்பதை "சத்" எனப்படுகின்றது.

அறிவின் இருப்பில் "ஆனந்தம்" உண்டாகின்றது.

இதுவே, "சத் சித் ஆனந்தம்" ஆகும்.
இதுவே "பிரம்மம்", "ஆத்மா", "நீ", "நான்" எல்லாமே.

இதை அறிவதே அறிவு.

இதுவே ஞானம்.

இதுவே அத்வைதம்.

ஆயிரந் தெய்வங்கள் உண்டென்று தேடி
அலையும் அறிவிலிகாள்!-பல
ஆயிரம் வேதம் அறிவொன்றே
தெய்வமுண்டாமெனல் கேளீரோ? - மகாகவி சுப்பிரமணியபாரதி.

மாடனைக் காடனை வேடனைப் போற்றி
மயங்கும் மதியிலிகாள்!-எதனூடும்
நின் றோங்கும் அறிவென்றே தெய்வ
மென்றோதி யறியீரோ? - மகாகவி சுப்பிரமணியபாரதி.

சுத்த அறிவே சிவமென்று கூறுஞ்
சுருதிகள் கேளீரோ?-பல
பித்த மதங்களிலே தடுமாறிப்
பெருமை யழிவீரோ? - மகாகவி சுப்பிரமணியபாரதி.

தன்னை அறியத் தனக்கொரு கேடில்லை
தன்னை அறியாமல் தானே கெடுகின்றான்
தன்னை அறியும் அறிவை அறிந்தபின்
தன்னையே அர்ச்சிக்கத் தானிருந் தானே. - திருமந்திரம்.

## அறிவை அறிவதுவே பொருள்

---------------------------------

323. எல்லாம் அறியும் அறிவு தனைவிட்டு
எல்லாம் அறிந்தும் இலாபம்அங்கில்லை
எல்லாம் அறிந்த அறிவினை நான்என்னில்
எல்லாம் அறிந்த இறைஎனல் ஆகுமே. - திருமந்திரம்

<u>பொருள்:-</u>

**எல்லாவற்றையும் அறிகின்ற அறிவை வெளியில் ஆராய விடுத்து, எல்லாவற்றையும் உணர்ந்தும் பயன் இல்லை. எல்லாவற்றையும் அறியும் அறிவு நான் தான் என்ற உணர்ச்சி பெறுவோமானல் அந்த அறிவே இறை அறிவாகும்.**

## ஈசன் இருப்பிடத்தை அறிய வழி

------------------------------------

324. வாசியும் மூசியும் பேசி வகையில்லை
பேசி இருந்து பிதற்றிப் பயன்இல்லை
ஆசையும் அன்பும் அறுமின் அறுத்தபின்
ஈசன் இருந்த இடம்எளி தாகுமே. - திருமந்திரம்

**பொருள்:-**

**பிராணவாயு, சுழுமுனை என்றெல்லாம் வாயில் பேசிப் பயனில்லை. இப் பேச்சின் மூலம் இறைவன் இருப்பிடத்தைக் காண முடியாது.**

**ஆசை, அன்பு இவற்றை ஒழிக்க வேண்டும். அப்படி இவற்றை நீக்கினால், இறைவன் இருக்கும் இடத்தை எளிதாக உணரலாம்.**

**பிராண வாயுவை அடக்கி ஒடுக்கப் பழகினால் இறைவனை அடையலாம் என்று பேசிக்கொண்டு உலகப் பற்றில் ஈடுபட்டு கொண்டு இருந்தால், இறைவனை அறிய முடியாது.**

**ஆகவே ஆசை, அன்பு இவற்றை ஒழிக்க வேண்டும் என்று இம்மந்திரம் கூறுகிறது. ஆசை என்பது உலக இன்பங்களில் உண்டாகும் பற்று. அன்பு என்பது மனைவி மக்களிடத்தில் காட்டும் பற்று.**

## திருவருட்பயன்

---------------

### 5. மூவகைத் திருமேனி கொள்பவன்

**அருவும் உருவும் அறிஞர்க்கு அறிவாம்**
**உருவும் உடையான் உளன்.** - உமாபதி சிவாச்சாரியார்.

**பொருள் :-**

**இறைவன் ஞானியர்க்கு அறிவே வடிவாய் விளங்குகின்றான். ஏனையோர்க்கு அருவம், உருவம், அரு வுருவம் என்னும் மூன்று திருமேனிகளை உடையவனாய் இருக்கின்றான்.**

**விளக்கம் :**

**உண்மை நிலையும் பொது நிலையும் :**

**இறைவனுக்கு இரண்டு நிலைகள் உண்டு. ஒன்று உண்மை நிலை. மற்றொன்று பொதுநிலை. இறைவன் இயல்பிலே தனக்கென உருவம், பெயர், தொழில் ஒன்றும் இல்லாதவன். இதுவே அவனது உண்மை நிலை. இதனை வடமொழியில் சொரூபம் என்பர்.**

இத்தன்மையனாகிய இறைவன் உயிர்களின் பொருட்டு உருவம் முதலியவற்றை மேற்கொள்வன். இஃது அவன் அடையும் பொது நிலையாகும். இதனைத் தடத்தம் என்பர்.

இறைவனது உண்மை நிலையை ஞானியரே அறிதல் கூடும். அவர்க்கு அவன் அறிவே வடிவாய் விளங்குவான்.

அதனை அறிந்த அப்பெரியோர் ஆராத இன்பத்தையே நுகர்ந்து நிற்பர். இறைவனது உண்மை நிலையை உணர மாட்டாதவரே ஏனையோர். அவர்களும் தன்னை மனம் மொழி மெய்களால் உணர்ந்து வழிபட்டு உய்தல் வேண்டி அருவம், உருவம், அருவுருவம் என்னும் மூவகைத் திருமேனிகளைக் கொள்வன்.

எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு. - திருக்குறள்.

பொருள் :-

எந்தப் பொருளானாலும், அது எப்படிக் காட்சி தந்தாலும், அப்பொருளின் வெளித்தோற்றத்தைக் காணாமல், உள்ளடக்கமாகிய உண்மைப் பொருளைக் காண்பதே மெய்யுணர்தல்.

அருளே உலகெலாம் ஆள்விப்ப தீசன்
அருளே பிறப்பறுப்ப தானால் - அருளாலே
மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையேன் எஞ்ஞான்றும்
எப்பொருளும் ஆவ தெனக்கு. - காரைக்கால் அம்மையார்.

பிறபொருளைக் காட்டுகின்ற கதிரவனது ஒளியே தன்னையும் காட்டுவதாகும் அல்லது, அவனைப் பிறிதோர் ஒளி காட்டமாட்டாது. ஆகையால், கதிரவன் ஒளியைக் கொண்டே கதிரவனைக் காணுதல் போல, இறைவனது அருளால் எல்லாப் பொருள்களையும் அறிதலுடன், அவனையும் அவன் அருளாலேதான் அறிதல் வேண்டும்.

`அவன் அருளாலே அவன் தாள் வணங்கி`
(அவன் அறிவாலே அவனை அறிவது)

- மாணிக்கவாசகர்.

அருளால் எவையும்பார் என்றான்-அத்தை
அறி யாதே சுட்டிஎன் அறிவாலே பார்த்தேன்,
இருளான பொருள் கண்ட தல்லாற்-கண்ட
என்னையுங் கண்டிலன் என்னேடி தோழி. - ஆனந்தக் களிப்பு
*13.*

எனத் தாயுமான அடிகளும் கூறினார்.

குருவாக வந்தவன் சொன்னான். அருளாலே எதையும் பார் என்று. அருளைக் கொண்டு இறைவனுடைய

அருளை அல்லது குருவருளையே துணையாகக் கொண்டு உலகத்தை நீ பார்க்க வேண்டும் என்று சொன்னானாம்.

அப்படிப் பார்த்திருந்தால் என்ன தெரிந்திருக்கும் அவனை அல்லாமல் உலகத்தில் வேறு எதுவும் இல்லை என்று தெரிந்திருக்கும்.

அப்படியானால் எண்ணுவதற்கே ஒன்றும் இல்லை, ஏகம் சத் என்று மகாவாக்கியம் பேசுவதுபோல எல்லாம் இறைவன் மயமாக இருக்கின்ற காரணத்தினாலே, இறைவன் ஒருவன் தான்-அப்புறம் ஒன்றுமே இல்லை. அடுத்தபடியாக எண்ணுவதற்கே ஒன்றும் இல்லை. அப்படித்தான் குரு சொன்னாராம்.

அருளாலே எவையும் பார் என்றார் அப்படியல்லாது நான் தவறு செய்து விட்டேன். "அத்தை அறியாதே சுட்டி என் அறிவாலே பார்த்தேன்". என்று தாயுமான சுவாமிகளும் அறிந்தார்.

ஓம் தத் சத்!

